கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

# சிவபூசைத்திரட்டு

***************

இஃது

சிவபூசை செய்கிறவர்களுடைய உபயோகத்திற்காக

## ஸ்ரீலஸ்ரீ. ஆறுமுக்நாவலரவர்கள்

*வைத்திருந்த ஏட்டின்படி*

பருத்தித்துறையைச் சேர்ந்த தும்பளை

சைவப் புலவர்

## வ. சுப்பிரமணியம் அவர்களால்

**1967** தை மாதம்

*யாழ்ப்பாணம் சைவபிரகாச யந்திரசாலையில்*
*அச்சிடப்பட்ட பிரதியை*

**1995** ஐப்பசி மாதம்.

300 புத்தகம்

குகன் ஸ்ருடியோ உரிமையாளர்

**திரு. அ. நாகரத்தினம் அவர்களால்**

பிரதி ஆக்கம் செய்யப்பட்டது



உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்



# சிவபூசைத்திரட்டு

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞான குரு வாணியையுண் ணாடு

## ஆரம்பம்

### திருஞானசம்பந்த சுவாமிகள்
### திருப்பிரமபுரம், பண் - நட்டபாடை

தோடுடையசெவியன்விடையேறியோர்தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிபூசியென்னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமலரான்முனைநாட்பணிந்தேத்தவருள்செய்த (1)
பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே

### திருநாவுக்கரசு சுவாமிகள்
### திருவதிகைவீரட்டானம், பண் - கொல்லி

கூற்றாயினவாறுவிலக்ககிலீர்கொடுமைபலசெய்தனநானறியேன்
ஏற்றாயடிக்கேயிரவும்பகலும்பிரியாதுவணங்குவனெப்பொழுதுந்
தோற்றாதென்வயிற்றினகம்படியேகுடரோடுதுடக்கிமுடக்கியிட
ஆற்றேனடியேனதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே (2)

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்
### திருவெண்ணெய்நல்லூர், பண் - இந்தளம்

பித்தாபிறைசூடிபெருமானேயருளாளா
எத்தான்மறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னை
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளத்தாவுனக்காளாயினியல்லேனெனலாமே (3)

### திருநா திருவாலவாய்த் திருத்தாண்டகம்

முளைத்தானையெல்லார்க்குமுன்னேதோன்றி
முதிருஞ்சடைமுடிமேன் முகிழ்வெண்டிங்கள்
வளைத்தானைவல்லசுரர்புரங்கண்மூன்றும்
வரைசிலையாவாசுகிமாநாணாக்கோத்துத்
துளைத்தானைச்சுடுசரத்தாற்றுவளநீறாத்
தூமுத்தவெண்முறுவலுமையோடாடித்
திளைத்தானைத்தென்கூடற்றிருவாலவாய்ச்
சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே. (4)

## பூதசுத்தி

### திருநா. திருககற்குடி திருத்தாண்டகம்

மண்ணதனிலைந்தைமாநீரினான்கை
வயங்கெரியின் மூன்றைமாருதத்திரண்டை
விண்ணதனிலொன்றைவிரிகதிரைத்
தண்மதியைத்தாரகைகடம்மின்மிக்க
எண்ணதனிலெழுத்தையேழிசையைக்காம
னெழிலழியவெரியுமிழ்ந்தவிமையாநெற்றிக்
கண்ணவனைக்கற்குடியில்விழுமியானைக்
கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனானே (5)

### திருஞான- திருமறைக்காடு, திருவிராகம், பண் – நட்டபாடை

இருநிலனதுபுனலிடைமடிதரவெரிபுகவெரியதுமிகு
பெருவெளியினிலவிதரவளிகெடவியனிடைமுழுவதுகெட
இருவர்களுடல்பொறையொடுதிரியெழிலுருவுடையவனினமலர்
மருவியவறுபதமிசைமுரன்மறைவனமமர்தருபரமனே 6)

## அந்தரியாகம்

### திருநா. தனித்திருநேரிசை

காயமேகோயிலாகக்கடிமனமடிமையாக
வாய்மையேதூய்மையாகமனமணியிலிங்கமாக
நேயமேநெய்யும்பாலாநிறையநீரமையவாட்டிப
பூசனையீசனார்க்குப்போற்றவிக்காட்டினோமே. (7)

மேற்படி சுவாமிகள், தனித்திருக்குறுந்தொகை

*தெள்ளத்தேறித்தெளிந்துதித்திப்பதோர்*
*உள்ளத்தேறலமுதவொளிவெளி*
*கள்ளத்தேன் கடியேன் கவலைக்கடல்*
*வெள்ளத்தேனுக்கெவ்வாறுவிளைந்ததே.* (8)

மேற்படி சுவாமிகள், தனித்திருநேரிசை

*உடம்பெனுமனையகத்துள்ளமேதகளியாக*
*மடம்படுமுணர்நெய்யட்டியுயிரெனுந்திரிமயக்கி*
*இடம்படுஞானத்தீயாலெரிகொளவிருந்துநோக்கில்*
*கடம்பமர்காளைதாதைகழலடிகாணலாமே* (9)

## சிவோகம்பாவனை

சுந்தர. திருவொற்றியூர் பண் தக்கேசி

*வழித்தலைப்படுவான் முயல்கின்றே*
*னுன்னைப்போலென்னைப்பாவிக்கமாட்டேன்*
*சுழித்தலைப்பட்டநீரதுபோலச்*
*சுழல்கின்றேன்சுழல்கின்றதென்னுள்ளம்*
*கழித்தலைப்பட்டநாயதுபோல*
*வொருவன்கோலபற்றிக்கறகறவிழுக்கை*
*ஒழித்துநீயருளாயினசெய்யா*
*யொற்றியூரெனுமூருறைவானே.* (10)

திருநா திருவாப்பாடி திருநேரிசை

*உள்ளுமாய்ப்புறமுமாகியுருவமாயருவுமாகி*
*வெள்ளமாய்க்கரையுமாகிவிரிகதிர்ஞாயிறாகிக்*
*கள்ளமாய்க்கள்ளத்துள்ளார்கருத்துமாயருத்தமாகி*
*அள்ளுவார்க்கள்ளல்செய்திட்டிருந்தவாபாடியாரே.* (11)

மேற்படி சுவாமிகள், கோயிற்றிருநேரிசை

*பத்தனாய்ப்பாடமாட்டேன்பரமனேபரமயோகீ*
*எத்தினாற்பத்திசெய்கேனென்னைநீயிகழவேண்டா*
*முத்தனேமுதல்வாதில்லையம்பலத்தாடுகின்ற*
*அத்தாவுன்னாடல்காண்பானடியனேன்வந்தவாறே* (12)

## பெட்டகக் கோயில் திறக்க

மேற்படி சுவாமிகள். திருமறைக்காடு திருக்குறுந்தொகை

பண்ணினேர்மொழியாளுமைபங்கரோ
மண்ணினார்வலஞ்செய்மறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்மினே (13)

## பெட்டகக் கோயிலினின்றும் சுவாமியை எழுந்தருளப்பண்ண

ஷெ சுவாமிகள். திருப்புள்ளிருக்குவேளூர். திருத்தாண்டகம்

ஆண்டானையடியேனையாளாக்கொண்டு
    வடியோடுமுடியயன்மாலறியாவண்ணம்
நீண்டானைநெடுங்களமாநகரான்றன்னை
    நேமிவான்படையானிளரவோனாகம்
கீண்டானைக்கேதாரமேவினானைக்
    கேடிலியைக்கிளர்பொறிவாளரவோடென்பு
பூண்டானைப்புள்ளிருக்குவேளூரானைப்
    போற்றாதேயாறநாள்போக்கினேனே (14)

## ஸ்நானவேதிகையில் எழுந்தருளச்செய்ய

ஷெ சுவாமிகள் திருக்கடுவாய்க்கரைப்புத்தூர் குறுந்தொகை

பந்தபாசமறுத்தெனையாட்கொண்ட
மைந்தனைமணவாளனைமாமலர்க்
கந்தநீர்க்கடுவாய்க்கரைத்தென்புத்தூர்
எந்தையீசனைக்கண்டினிதாயிற்றே (15)

## அட்டபுஷ்பம்

மேற்படி சுவாமிகள். திருமறைக்காடு, குறுந்தொகை

அட்டமாமலர்சூடியடும்பொடு
வட்டப்புன்சடைமாமறைக்காடரோ
நட்டமாடியுநான்மறைபாடியும்
இட்டமாகவிருக்குமிடமிதே (16)

## தூபதீபம்

திருஞான. திருச்சண்பை, திருவிராகம. பண் - சாதாரி

எந்தமதுசிந்தைபிரியாதபெருமானெனவிறைஞ்சியிமையோர்
வந்துதுதிசெய்யவளர்தூபமொடுதீபமலிவாய்மையதனால்
அந்தியமர்சந்திபலவர்ச்சனைகள்செய்யவமர்கின்றவழகன்
சந்தமலிகுந்தளநன்மாதினொடுமேவுபதிசண்பைநகரே. (17)

## எண்ணெய்க் காப்பு

திருஞான. கோயில். பண் - காந்தாரபஞ்சமம்

ஆடினாய்நறுநெய்யொடுபாறயிரந்தணர்பிரியாதசிற்றம்பலம்
நாடினாயிடமாநறுங்கொன்றைநயந்தவனே
பாடினாய்மறையோடுபல்கீதமும்பலசடைப்பனிகால்கதிர்வெண்
சூடினாயருளாய்சுருங்கவெந்தொல்வினையே (திங்கள் (18)

## பஞ்சகௌவியம்

திருநா. பாவநாசத் திருக்குறுந்தொகை

பாவமும்பழிபற்றறவேண்டுவீர்
ஆவிலஞ்சுகந்தாடுமவன்கழல்
மேவராய்மிகவும்மகிழ்ந்துள்குமின்
காவலாளன்கலந்தருள்செய்யுமே (19)

## பாலமுதம்

திருஞான. திருச்செங்காட்டங்குடி பண் - பழந்தக்கராகம்

பாலினானறுநெய்யாற்பழத்தினாற்பயின்றாட்டி
நூலினான்மணமாலைகொணர்ந்தடியார்புரிந்தேத்தச்
சேலினார்வயல்புடைசூழ்செங்காட்டங்குடியதனுள்
காலினாற்கூற்றுதைத்தான்கணபதீச்சரத்தானே. (20)

## நெய்

### திருநா. திருப்புகலூர் திருத்தாண்டகம்

*நெய்யாடிநின்மலனேநீலகண்டா*
*நிறைவுடையாய்மறைவல்லாய்நீதியானே*
*மையாடுகண்மடவாள்பாகத்தானே*
*மான்றோலுடையாய்மகிழ்ந்துநின்றாய்*
*கொய்யாடுகூவிளங்கொன்றைமாலை*
*கொண்டடியேனானிட்டுக்கூறிநின்று*
*பொய்யாதசேவடிக்கேபோதுகின்றேன்*
*பூம்புகலூர்மேவியபுண்ணியனே.* (21)

## பால்

### மேற்படி சுவாமிகள்: திருவெண்காடு திருக்குறுந்தொகை

*பாலையாடுவர்பன்மறையோதுவர்*
*சேலையாடியகண்ணுமைபங்கனார்*
*வேலையார்விடமுண்டவெண்காடர்க்கு*
*மாலையாவதுமாண்டவரங்கமே.* (22)

## தேன்

### சுந்தர. திருவாவடுதுறை பண் தக்கேசி

*வானநாடனேவழித்துணைமருந்தேமாசிலாமணியேமறைப்பொருளே*
*ஏனமாவெயிறாமையுமெனபுமீடேதாங்கியமார்புடையானே*
*தேனெய்பாறயிராட்டுகந்த னேதேவனேதிருவாவடுதுறையுள்*
*ஆனையேயெனையஞ்சலென்றருளாயாரெனக்குறவமரர்களேறே* (23)

### திருநா. திருநீலக்குடி திருக்குறுந்தொகை

*செய்யமேனியன்றேனொடுபாறயிர்*
*நெய்யதாடியநீலக்குடியரன்*
*மையலாய்மறவாமனத்தார்க்கெலாம்*
*கையிலாமலகக்கனியொக்குமே.* (24)

## கருப்பஞ்சாறு

மேற்படி சுவாமிகள், திருவீழிமிழலை திருத்தாண்டகம்

ஆலைப்படு கரும்பின் சாறுபோல
வண்ணிக்குமஞ்செழுத்தினாமத்தான் காண்
சீலமுடையடியார் சிந்தையான் காண்
திரிபுரமுன்னெரிபடுத்தசிலையினான் காண்
பாலினொடுதயிர் நறுநெய்யாடினான் காண்
பண்டரங்கவேடன் காண் பலிதேர்வான் காண்
வேலைவிடமுண்டமிடற்றினான் காண்
விண்ணிழிதண்வீழிமிழலையானே. (25)

## பலகனிச்சாறு

ஷ்டி சுவாமிகள் திருவிடைமருதூர் திருக்குறுந்தொகை

கனியினுங் கட்டிபட்டகரும்பினும்
பனிமலர்க்குழற்பாவைநல்லாரினும்
தனிமுடி கவித்தாளுமரசினும்
இனியனறன்னடைந்தார்க்கிடைமருதனே. (26)

## இளநீர்

மேற்படி சுவாமிகள் திருவீழிமிழலை திருத்தாண்டகம்

நெய்யினொடுபாலிளநீராடினான் காண்
நித்தமணவாளனென்கின்றான் காண்
கையின் மழுவாளொடுமானேந்தினான் காண்
காலனுயிர்காலாற்கழிவித்தான் காண்
செய்யதிருமேனிவெண்ணீற்றினான் காண்
செஞ்சடைமேல்வெண்மதியஞ்சேர்த்தினான் காண்
வெய்யகனல்விளையாட்டாடினான் காண்
விண்ணிழிதண்வீழிமிழலையானே. (27)

## சுத்தசலம்

**திருஞான. திருவிடைமருதூர் பண் - தக்கராகம்**

தடங்கொண்டதொர்தாமரைப்பொன்முடிதன்மேல்
குடங்கொண்டடியார்குளிர்நீர்சுமந்தாட்டப்
படங்கொண்டதொர்பாம்பரையார்த்தபரமன்
இடங்கொண்டிருந்தான்றனிடைமருதீதோ. (28)

## சந்தனக்குழம்பு

**திருநா தனித்திருநேரிசை**

தொண்டனேன்பட்டதென்னேதூயகாவிரியினன்னீர்
கொண்டிருக்கோதியாட்டிக்குங்குமக்குழம்புசாத்தி
இண்டைகொண்டேறநோக்கியீசனையெம்பிரானைக்
கண்டனைக்கண்டிராதேகாலத்தைக்கழித்தவாறே? (29)

**திருஞான. திருக்கானப்பேர் பண் - கொல்லி**

வாவிவாய்த்தங்கியநுண்சிறைவண்டினம்
தாவிவாய்ப்பண்செயுங்கானப்பேரண்ணலை
வாவிவாய்ச்சாந்துளும்பூவளுஞானநீர
தூவிவாய்ப்பெய்துநின்றாட்டுவார்தொண்டரே (30)

## தூபம்

**ஷெடி சுவாமிகள் திருச்செங்காட்டங்குடி பண் - பழந்தக்கராகம்**

தொங்கலுங்கமழ்சாந்துமகிற்புகையுந்தொண்டர்கொண்
டங்கையாற்றொழுதேத்தவருச்சுனர்க்கன்றருள்செய்தான்
செங்கயல்பாய்வயலுடுத்தசெங்காட்டங்குடியதனுள்
கங்கைசேர்வார்சடையான்கணபதீச்சரத்தானே (31)

## சுத்தோதகம்

**திருநா. திருப்பாதிரிப்புலியூர் திருவிருத்தம்**

வைத்தபொருணமக்காமென்றுசொல்லிமனத்தடைத்துச்
சித்தமொருக்கிச்சிவாயநமவென்றிருக்கினல்லால
மொய்த்தகதிர்மதிபோல்வாரவர்பாதிரிப்புலியூர்
அத்தனருள் பெறலாமோவறிவிலாப்பேதைநெஞ்சே. (32)

## பீடத்திலெழுந்தருளப்பண்ண

திருஞான திருப்புள்ளிருக்குவேளூர் பண் - சீகாமரம்

கள்ளார்ந்தபூங்கொன்றை மதமத்தங்கதிர்மதியம்
உள்ளார்ந்தசடைமுடியெம்பெருமானாருறையுமிடந்
தள்ளாயசம்பாதிசடாயென்பார்தாமிருவர்
புள்ளானார்க்கரையனிடம்புள்ளிருக்குவேளூரே. (33)

## ஆவாகனம

திருநா சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை

அண்டமாரிருளூடுகடந்தும்பர்
உண்டுபோலுமோரொண்சுடரச்சுடர்
கண்டிங்காரறிவாரறிவாரெலாம்
வெண்டிங்கட்கண்ணிவேதியனென்பரே. (34)

மேற்படி சுவாமிகள் திருவிண்ணப்பம், திருக்குறுந்தொகை

என்னிலாருமெனக்கினியாரில்லை
என்னிலும்மினியானொருவனுளன்
என்னுளேயுயிர்ப்பாய்ப்புறம்போந்துபுக்
கென்னுளேநிற்குமின்னம்பரீசனே. (35)

## தியானம்

அஞ்சுதிருமுகமேநீறங்களைந்தே
மையமூன்றுதிருக்கண்ணேயத்தம்பத்தே
வஞ்சமழுச்சூலம்வாளபயம்வச்ரம்
வலப்பாலேயமர்ந்ததுமற்றிடப்பால்
துஞ்சனலுமங்குசமுமணியும்பாம்புந்
தோற்கயிறுமுடனுண்டேதோகையுண்டே
பிஞ்சுமதிமுடிமேற்கங்கையுண்டே
யிப்படியெம்பிரானாரைக்கண்டவாறே. 136

## சிவதருமோத்தரம் பரிகாரவியல்

*உச்சிமுகமீசானமொளிதெளியபளிங்கே*
*யுத்தரபூருவதிசையைநோக்கியுறுமுகந்தே*
*நிச்சயித்தமுகத்தின்கீழ்ப்பூர்வதிசைநோக்கி*
*நிகழுமுகந்தற்புருடங்கோங்கலர்போனிறமே*
*யச்சுறுத்துமகோரமுகமறக்கரிதுகராள*
*மனிழ்தாடிவலத்தோளிற்றென்னோக்கியமருஞ்*
*செச்சைநிறந்தெரிவைமுகமிடத்தோண்மேல்வாமஞ்*
*சிறுபுறத்தின்முகஞ்சத்தியோசாதந்திகழ்வால் (37)*

## அருக்கியம்

திருஞான திருநனிபள்ளி பண் பியந்தைக்காந்தாரம்

*தோடொருகாதனாகியொருகாதிலங்குசுரிசங்குநின்றுபுரளக்*
*காடிடமாகநின்றுகனலாடுமெந்தையிடமாயகாதனகர்தான்(லால்*
*வீடுடனெய்துவார்கள்விதியென்றுசென்றுவெறிநீர்தெளிப்பவிர*
*நாடேனாடுசெம்மையொலிவெள்ளமாருநனிபள்ளிபோலுநமர்காள் (38)*

## கோவணம்பாவனை சாத்த

ஷடி சுவாமிகள் திருக்கொள்ளிக்காடு பண் - காந்தாரபஞ்சமம்

*பாவணமேவுசொன்மாலையிற்பல*
*நாவணங்கொள்கையினவின்றசெய்கையர்*
*ஆவணங்கொண்டெமையாள்வராயினும்*
*கோவணங்கொள்கையர்கொள்ளிக்காடரே (39)*

## கீழ்பாவனை சாத்த

திருநா திருப்பராய்த்துறை திருக்குறுந்தொகை

*பட்டநெற்றியர்பாண்மதிக்கீற்றினர்*
*நட்டமாடுவர்நள்ளிருளேமமும்*
*சிட்டனார்தென்பராய்த்துறைச்செல்வனார்*
*இட்டமாயிருப்பாரையறிவரே. (40)*

## பரிவட்டம்

மேற்படி சுவாமிகள். திருப்பருப்பதம் திருநேரிசை

*சுட்டிட்டதலைகையேந்திக்கனலெரியாடிச்சீறிச்*
*சுட்டிட்டநீறுபூசிச்சுடுபிணக்காடராகி*
*விட்டிட்டவேட்கையார்க்குவேறிருந்தருள்கள்செய்து*
*பட்டிட்டவுடையராகிப்பருப்பதநோக்கினாரே.* (41)

## சந்தனஞ் சாத்த

மேற்படி சுவாமிகள் திருக்கீழ்வேளூர் திருத்தாண்டகம்

*ஆளானவடியவர்கட்கப்பன்றன்னை*
*யானஞ்சுமாடியையநானபயம்புக்க*
*தாளானைதன்னொப்பாரில்லாதானைச்*
*சந்தனமுங்குங்குமமுஞ்சாந்துந்தோய்ந்த*
*தோளானைத்தோளாமுத்தொப்பானைத்*
*தூவெளுத்தகோவணத்தையரையிலார்த்த*
*கீளானைக்கீழ்வேளூராளுங்கோவைக்*
*கேடிலியைநாடுமவர்கேடிலாரே* (42)

## பூஷணம்

திருஞான. திருக்கைச்சினம் பண் - சீகாமரம்

*மங்கையோர்கூறுடையான்யன்னுமறைபயின்றான்*
*அங்கையோர்வெண்டலையானாடரவம்பூண்டுகந்தான்*
*திங்களொடுபாம்பணிந்தசீரார்திருமுடிமேற்*
*கங்கையினான்மேவியுறைகோயிலகைச்சினமே* (43)

## பூணூல்

மேற்படி சுவாமிகள் திருநணா பண் - காந்தாரம்

*முத்தேர்நகையாளிடமாகத்தம்மார்பில்வெண்ணூல்பூண்டு*
*தொத்தேர்மலர்சடையில்வைத்தாரிடம்போலுஞ்சோலைசூழ்ந்த*
*அத்தேனளியுண்களியாலிசைமுரலவாலத்தும்பி*
*தெத்தேயெனமுரலக்கேட்டார்வினைகெடுக்குந்திருநணாவே* (44)

## புஷ்பாஞ்சலி

திருநா. திருவையாறு திருவிருத்தம்

*பூம்போலமரர் கணீண் முடிசாய்த்துநீமிர்த்துகுத்த
மைமேபோதுழக்கிப்பவளந்தழைப்பனபாங்கறியா
என்போலிகள் பறித்திட்டவிலையுமுகையுமெல்லாம்
அம்போதெனக்கொள்ளுமையனையாறனடித்தலமே.* (45)

## இண்டைசாத்த

மேற்படி. சுவாமிகள். திருக்கச்சியேகம்பம் பண் - காந்தாரம்

*அண்டமாயாதியாயருமறையொடைம்பூதப்
பிண்டமாயுலகுக்கொர்மெய்ப்பொருளாம்பிஞ்ஞகனைத்
தொண்டர்தாமலாதூவிச்சொன்மாலைபுனைகின்ற
இண்டைசேர்சடையானைஎன்மனத்தேவைத்தேனே.* (46)

## திருப்பள்ளித்தாமம் பத்திரஞ்சாத்த

ஷை சுவாமிகள், திருப்பாரய்த்துறை திருக்குறுந்தொகை

*போதுதாதொடுகொண்டுபுனைந்துடன்
தாதவிழ்சடைச்சங்கரன்பாகத்துள்
வாதைதீரக்கவெண்ணேத்திப்பராய்த்துறைச்
சோதியானைத்தொழுதெழுந்துய்ம்மினே* (47)

திருஞான திருக்கச்சியேகம்பம் பண் - இந்தளம்

*நொச்சியேவன்னிகொன்றைமதிகூவிளம்
உச்சியேபுனைதல்வேடம்விடையூர்தியான்
கச்சியேகம்பர் மேயகறைக்கண்டனை
நச்சியேதொழுமினும்மேல்வினைநையுமே* (48)

## போகாங்கமூர்த்தி பூசைக்குத் தியானம் -

சிவதருமோத்தரம் பரிகாரவியல்

*திருவுருவந்தெளிபளிங்குதிரிநயனம்பிறையுஞ்
செறிசடையர்வலக்கரத்திற்றிரிசூலம்வரதம்
கருதுகமற்றையகரத்திற்செபமாலையபயங்
காருணிகர்க்கீசானர்க்கவர்தமக்குக்கனிட்டர்*

திருவுருவங்கோங்கிணலர் திருநயனங்கரமுன்
செப்பியதே திருநாமந் தற்புருடதேவர்
செப்பரவமிளம்பிறையுஞ் சடைமுடியின் வைத்தார்
மலரடியை மறவாதார் வல்வினையை மாய்ப்பார் (49)

கரியவுருவெரியசடை கபாலநிரைமாலை
கராளமுகங்கவிழ்தாடி கண்மூன்று வட்டங்
கரகலங்களொருநான்கும் கட்டுரைத்தபடியே
காட்டினமுன்னிருநான்கு கரமுமுளரெனறே
வெருவயிடமருவலரை வெருட்டியவக்கிரத்து
வக்கிரகாகோரமென விளம்புபெயருடையர்
இருபகமுமொருபொழுதுமறவாதேயேத்தி
யெண்ணுமவரிடர்வினையையிடிப்பார்களென்றும் (50)

தேமொழியாளுமையயன்னத் திருமுகமுந்தோடுந்
திலதநுதற்சிறப்புமிருளளகவீகச்செறிவும்
வாமமெனுந்தேவர்க்குவாய்த்தனவேசெம்மை
வடிவமவாகரதலங்கண்ணாதிதனில்வருபவே
சேமவுருத்திகழ்சங்குஞ்சடாமுடியிற்பிறையுந்
திரிநயனங்கரதலங்கள்செப்பியமுற்படியே
நாமமதுசத்தியோசாதமெனநவின்ற
நாதற்குநயந்தவரைநினைக்கவினைநாசம் (51)

திருவுருவமிதயாக்குத்தவளமெனத்தெளிக
சேடித்தவுறுப்பணைத்துஞ்செப்பியமுற்படியே
திருவுருவங்கனகமெனச்சிரத்தினுக்குத்தெளிக
சேடித்தவுறுப்பணைத்துஞ்செப்பியமுற்படியே
திருவுருவஞ்சிந்தூரமெனத்தெளிகசிகைக்குச்
சேடித்தவுறுப்பனைத்துஞ்செப்பியமுற்படியே
திருவுருவம்வண்டினிறங்காராளமுகங்கவசஞ்
சேடித்தவுறுப்பனைத்துஞ்செப்பியமுற்படியே (52)

ஒவ்வொன்றேத்திருமுகமுநேத்திரங்கட்குணரி
னுடலொளியுமிரவிமதியுதாசனனையொக்கும்
அவ்விரண்டேகரதலமும்வரமபயமவையும்
இவ்விரண்டேவிழியுமெனவெண்ணிடுகவெழிலார்

செவ்வரத்தந்திருவுருவங்சரகலமீரைந்துந்
திருநயனமொருமுனறுஞ்சினந்கடித்தகூரலும்
இவ்வகையெல்லாமுடையரதக்னரொனறியம்பும்
இவரடியையிதயத்தினிருத்தினிடரிலையே (53)

## நிவேதனஞ்செய்ய

சுந்தர திருக்கச்சியேகம்பம் பண் தக்கேசி

ஆலந்தானுகந்தமுதுசெய்தானையாதியையமரர்தொழுதேத்தும்
சீலந்தான்பெரிதும்முடையானைச்சிந்திப்பார வர்சிந்தையுளானை
ஏலவார்குழலாமுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற (றே.
காலகாலனைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவா (54)

## அடைக்காம்பு

திருநா. திருப்புறம்பயம் திருத்தாண்டகம்

ஆகாதநஞ்சுண்டவந்திவண்ண
றைந்தலையமாசுணங்கொண்டம்பொற்றோண்மேல்
ஏகாசமாவிட்டொனறேந்திவந்
திரேந்திருவேபலியென்றார்க்கில்லேபுக்கேன்
பாசேதுங்கொள்ளார்பலியுங்கொள்ளார்
பாவியேன்கண்ணுள்ளேபற்றிநோக்கிப்
போகாதவேடத்தர்பூதஞ்சூழப்
புறம்பயநம்மூரென்றுபொயினாரே. (55)

## தூபம்

திருஞான. திருக்கழிப்பாலை பண் - கௌசிகம்

வெந்தகுங்கலியப்புகைவிம்மவே
கந்தநின்றுலவுங்கழிப்பாலையார்
அந்தமும்மளவுமறியாததோர்
சந்தமாலவர்மேவியசாந்தமே. (56)

## தீபம்

திருநா திருவையாறு திருத்தாண்டகம்

*எல்லாவுலகமுமானாய்நீயே*
*ஏகம்பமேவியிருந்தாய்நீயே*
*நல்லாரைநன்மையறிவாய்நீயே*
*ஞானச்சுடர்விளக்காய்நின்றாய்நீயே*
*பொல்லாவினைகளறுப்பாய்நீயே*
*புகழ்ச்சேவடியென்மேல்வைத்தாய்நீயே*
*செல்வாயசெல்வந்தருவாய்நீயே*
*திருவையாறகலாதசெம்பொற்சோதீ* (57)

மேற்படி சுவாமிகள் திருமறைக்காடு திருத்தாண்டகம்

*தூண்டுசுடரனையசோதிகண்டாய்*
*தொல்லமரர்சூளாமணிதான்கண்டாய்*
*காண்டற்கரியகடவுள்கண்டாய்*
*கருதுவார்க்காற்றவெளியான்கண்டாய்*
*வேண்டுவார்வேண்டுவதேயீவான்கண்டாய்*
*மெய்ந்நெறிகண்டாய்விரதமெல்லாம்*
*மாண்டமனத்தார்மனத்தான்கண்டாய்*
*மறைக்காட்டுறையுமணாளன்றானே.* (58)

## நீறு சாத்த

மேற்படி சுவாமிகள் திருவாரூர் பண் – காந்தாரம்

*நீறுமெய்பூசவல்லானுநினைப்பவர்நெஞ்சத்துள்ளாலும்*
*ஏறுகந்தேறவல்லானுமெரிபுரைமேனியினானும்*
*நாறுகரந்தையினானுநான்மறைகண்டத்தனாலும்*
*ஆறுசடைக்கரந்தானுமாரூரமர்ந்தவம்மானே* (59)

## கண்ணாடி

மேற்படி சுவாமிகள் திருவாரூர் திருவிருத்தம்

*பூம்படிமக்கலம்பொற்படிமக்கலமென்றிவற்றால்*
*ஆம்படிமக்கலமாகிலுமாரூரினிதமர்ந்தார்*

தாம்படிமக்கலம்வேண்டுவரேற்றமிழ்மாலைகளால்
நாம்படிமக்கலஞ்செய்துதொழுதுய்மடநெஞ்சமே 60)

## செபம் செய்து உதகம்பண்ண

### நமச்சிவாயப்பதிகம்

சுந்தர. திருப்பாண்டிக்கொடுமுடி பண் - பழம்பஞ்சுரம்

இட்டனும்மடியேகதுவாரிகழ்ந்திட்டநாண்மறந்திட்டநாள்
கெட்டநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரி
வட்டவாசிகைகொண்டடிதொழுதேத்துபாண்டிக்கொடுமுடி
நட்டவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே 61)

## குருவர்ச்சனை

மேற்படி சுவாமிகள் திருக்காளத்தி பண் - நட்டராகம்

மறிசேர்கையினனேமதமாவுரிபோர்த்தவனே
குறியேயெனனுடையகுருவேயுன்குற்றேவல்செய்வேன்
நெறியேநின்றடியார்நினைக்குந்திருக்காளத்தியுள்
அறிவேயுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே. (62)

## எழுந்து கும்பிட

திருஞான. திருவாவூர்ப்பசுபதீச்சரம் பண் - நட்டபாடை

குற்றமறுத்தார்குணத்தினுள்ளார்கும்பிடுவார்தமக்கன்புசெய்வார்
ஒற்றைவிடையினர்நெற்றிக்கண்ணாருறைபதியாகுஞ்செறிகொண்
மாடம், சுற்றியவாசலின்மாதர்விழாச்சொற்கவிபாடநிதானநல்க
கப், பற்றியகையினர்வாழுமாவூர்ப்பசுபதீச்சரம்பாடிநாவே (63)

## பிரதக்ஷிணம்

திருநா. திருவாரூர் திருத்தாண்டகம்

மதிதருவனெஞ்சமேயுயஞ்சுபோக
வழியாவதிதுகண்டாய்வானோர்க்கெல்லாம்
அதிபதியேயாரமுதேயாதீயென்று
மம்மானேயாரூரெம்மையாவென்றும்

துதிசெய் துதுன் றுமலர்கொண்டு தூவிச்
சூழும்வலஞ்செய் துகொண்டுபோடிக்
கதிர்மதிசேர்சென்னியனே காலகாலா
கற்பகமேயென்றென்றேகதறாநில்லே (64)

கூத்தாட

மேற்படி சுவாமிகள் கோயிற்றிருநேரிசை

பாத்திருந்தடியனேனான் பரவுவன் பாடியாடி
மூர்த்தியேயென்பனுன்னை மூவரின் முதல்வனென்பன்
ஏத்துவாரிடர்களைப்பாய்தில்லைச்சிற்றம்பலத்துக்
கூத்தாவுன் கூத்துக்காண்பான் கூடநான் வந்தவாறே (65)

## தண்டப் பண்ணுமுன் செய்யுந்துதி

சுந்தர திருப்புன்கூர் பண் - தக்கேசி

அந்தணாளனுன்னடைக்கலம்புகுத
வவனைக்காப்பதுகாரணமாக
வந்தகாலன்றனாருயிரதனை
வவ்வினாய்க்குன்றன் வண்மைகண்டடியேன்
எந்தைநீயெனைநமன்றமர்நலியி
லிவன்மற்றென்னடியானெனவிலக்கும்
சிந்தையால்வந்துன்றிருவடியடைந்தேன்
செழும்பொழிற்றிருப்புன் கூருளானே (66)

நற்றமிழ்வல்லஞானசம்பந்த
னாவினுக்கரையனாளைப்போவானும்
கற்றசூதனற்சாக்கியன்சிலந்தி
கண்ணப்பன் கணம்புல்லனென்றிவர்கள்
குற்றஞ்செய்யினுங்குணமெனக்கருதுங்
கொள்கைகண்டுநின் குரைகழலடைந்தேன்
பொற்றிரண்மணிக்கமலங்கண் மலரும்
பொய்கைசூழ்திருப்புன் கூருளானே. (67)

இயக்கர்கின்னரர்யமனொடுவருண
ரியங்குதீவளிஞாயிறுதிங்கள்
மயக்கமில்புலிவானரநாகம்
வசுக்கள்வானவர்தானவரெல்லாம்

அயர்ப்பொன்றின்றி நின்றிருவடியதனை
யர்ச்சித்தார்பெறுமாரருள் கண்டு
திகைப்பொன்றின்றி நின்றிருவடியடைந்தேன்
செழும்பொழிற்றிருப்புன்கூருளானே. (68)

## தண்டம்பண்ண

திருநா. தனித்திருநேரிசை

அங்கத்தைமண்ணுக்காக்கியார்வத்தையுனக்கேதந்து
பங்கத்தைப்போகமாற்றிப்பாவித்தேன்பரமாநின்னைச்
சங்கொத்தமேனிச்செல்வாசாதனாணாயேனுன்னை
எங்குற்றாயென்றபோதாலிங்குற்றேனென்கண்டாயே. (69)

மேற்படி சுவாமிகள் திருக்கடம்பூர் குறுந்தொகை

நகைடமபனைப்பெற்றவள்பங்கினன்
தென்கடம்பைத்திருக்கரக்கோயிலான்
தன்கடனடியேனையுந்தாங்குதல
என்கடன்பணிசெய்துகிடப்பதே (70)

மேற்படி சுவாமிகள் தனித்திருக்குறுந்தொகை

வாழ்த்தவாயுநினைக்கமடநெஞ்சுந்
தாழ்த்தச்சென்னியுந்தந்ததலைவனைச்
சூழ்த்தமாமலர்தூவித்துதியாதே
வீழ்த்தவாவினையேனெடுங்காலமே. (71)

மேற்படி சுவாமிகள் திருமருகல் குறுந்தொகை

பெருகலாந்தவம்பேதைமைதீரலாம்
திருகலாகியசிந்தைதிருத்தலாம்
பருகலாமபரமாயதோரானந்தம்
மருகலானடிவாழ்த்திவணங்கவே. (72)

## எழுந்து தோத்திரம்பண்ண

மேற்படி சுவாமிகள், திருக்கடம்பூர் குறுந்தொகை

பொய்தொழாதுபுலியுரியோன்பணி
செய்தெழாவெழுவார்பணிசெய்தெழா
வைதெழாதெழுவாரவரெள்கநீர்
கைதொழாவெழுமின்கரக்கோயிலே. (73)

மேற்படி சுவாமிகள். தனித்திருத்தாண்டகம்

அப்பனீ யம்மைநீ யையனுநீ
யன்புடைய மாமனுமா மியுநீ
ஒப்புடைய மாதருமொண் பொருளுநீ
யொருகுலமுஞ் சுற்றமுமோ ரூருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்றுவாய்நீ
துணையாயென் னெஞ்சந் துறப்பிப்பாய்நீ
இப்பொன்னீ யிம்மணிநீ யிம்முத்துநீ
யிறைவனீ யேறூர்ந்த செல்வனீயே. (74)

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும்பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோலமாய
நலம்பொல்லே னான்பொல்லேன் ஞானியல்லே
னல்லாரோ டிசைந்திலேன் நடுவேநின்ற
விலங்கல்லேன் விலங்கலா தொழிந்தே னல்லேன்
வெறுப்பனவு மிகப்பெரிதும் பேசவல்லேன்
இலம்பொல்லே னிரப்பதலா லீயமாட்டே
னென்செய்வான் றோன்றினே னேழையேனே. (75)

மேற்படி சுவாமிகள் திருவாவடுதுறை திருத்தாண்டகம்

திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதிமிக்க
உருவேயென் னுறவேயென் னூனே யூனி
னுள்ளமே யுள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோ யடையாவண்ண
மாவடுதண் டுறையுறையு மமரரேறே. (76)

மேற்படி சுவாமிகள் திருவாரூர் திருத்தாண்டகம்

ஆடுவாய் நீநட்ட மளவிற் குன்றா
வவியடுவா ரருமறையோ ரறிந்தே னுன்னைப்
பாடுவார் தும்புருவு நாரதாதி
பரவுவா ரமரர்களு மமரர்கோனும்

தேடுவார்திருமாலுநான் முகனுந்
தீண்டுவார்மலைமகளுங்கங்கையாளும்
கூடுமோநாயடியேன்செய்குற்றேவல்
குறையுண்டோதிருவாரூர்குடிகொண்டீர்க்கே (77)

மேற்படி சுவாமிகள் போற்றித் திருத்தாண்டகம்

சங்கரனேநின்பாதம்போற்றிபோற்றி
சதாசிவனேநின்பாதம்போற்றிபோற்றி
பொங்கரவாநின்பாதம்போற்றிபோற்றி
புண்ணியனேநின்பாதம்போற்றிபோற்றி
அங்கமலத்தயனொடுமாலுங்காணா
வனலுருவாநின்பாதம்போற்றிபோற்றி
செங்கமலத்திருப்பாதம்போற்றிபோற்றி
திருமுலட்டானனேபோற்றிபோற்றி (78)

திருநா. திருக்கடவூர்வீரட்டானம் திருநேரிசை

பழியுடையாக்கைதன்னிற்பாழுக்கேநீரிறைத்து
வழியிடைவாழமாட்டேன்மாயமுந்தெளியகில்லேன்
அழிவுடைத்தாயவாழ்க்கையைவராலலைக்கப்பட்டுக்
கழியிடைத்தோணிபோன்றேன்கடவூர்வீரட்டனாரே (79)

ஷெ சுவாமிகள் திருவதிகைவீரட்டானம் திருநேரிசை

நீதியால்வாழமாட்டேனித்தலுந்தூயனல்லேன்
ஓதியுமுணரமாட்டேனுன்னையுள்வைக்கமாட்டேன்
சோதியேசுடரேயுன்றன் றூமலர்ப்பாதங்காண்பான்
ஆதியேயலந்துபோனேன்திகைவீரட்டனாரே. (80)

கழித்திலேன்காமவெந்நோய்காதன்மையென்னுமபாசம்
ஒழித்திலேனூன்கணாக்கியுணர்வெனுமிமைதிறந்து
விழித்திலேன்வெளிறுதோன்றவினையெனுஞ்சரக்குக்கொண்டே
னழித்திலேன்யர்த்துப்போனேனதிகைவீரட்டனாரே (81)

மேற்படி சுவாமிகள் திருக்கோடிகா திருநேரிசை

கேழல்வெண்கொம்புபூண்டகிளரொளிமார்பினானே
ஏழையேனேழையேனானென்செய்கேனெந்தைபெம்மான்
மாழையொண்கண்ணினார்கள்வலைதனின்மயங்குகின்றேன்
கூழையேறுடையசெல்வாகோடிகாவுடையகோவே. (82)

### மேற்படி சுவாமிகள் தனித்திருநேரிசை

மாண்டனேன் பிறந்துவாளா தொல்வினைக்குழியில்வீழ்ந்து
பூண்டமேசுமந்துநாளும்பெரியதோரவாவிற்பட்டேன்
வேண்டனேயமரர்கோவேயறிவனேயஞ்சலென்னாய்
தெண்டிரைக்கங்கைசூடுந்திகழ்தருசடையினானே (83)

### மேற்படி சுவாமிகள் கோயில் திருவிருத்தம்

படைக்கலமாகவுன்னாமத்தெழுத்தஞ்செனாவிற்கொண்டேன்
இடைக்கலமல்லேனெழுபிறப்புமுனக்காட் செய்கின்றேன்
துடைக்கினும்போகேன்றொழுதுவணங்கித்தூநீறணிந்துன்
அடைக்கலங்கண்டாயணிதில்லைச்சிற்றம்பலத்தரனே. (84)

### மேற்படி சுவாமிகள் திருப்பாதிரிப்புலியூர் திருவிருத்தம்

புழுவாய்ப்பிறக்கினும்புண்ணியாவுன்னடியென்மனத்தே
வழுவாதிருக்கவரந்தரவேண்டுமிவ்வையகத்தே
தொழுவார்க்கிரங்கியிருந்தருள்செய்பாதிரிப்புலியூர்ச்
செழுநீர்ப்புனற்கங்கைசெஞ்சடைமேல்வைத்ததீவண்ணனே. (85)

### சுந்தர திருவாவடுதுறை பண் - தக்கேசி

ஒப்பிலாமுலையாளொருபாகாவுத்தமாமத்தமார்தருசடையாய்
முப்புரங்களைத்தீவளைத்தங்கேமூவருக்கருள்செய்யவல்லானே
செப்பவானிழற்கீழிருந்தருளுஞ்செல்வனேதிருவாவடுதுறையுள்
அப்பனேயெனையஞ்சலென்றருளாயாரெனக்குறவமரர்களேறே (86)

குறைவிலாநிறைவேகுணக்குன்றேகூத்தனேகுழைக்காதுடையானே
உறவிலேனுனையன்றிமற்றடியேனொருபிழைபொறுத்தாலிழிவுண்டோ
சிறைவண்டார்பொழில்சூழ்திருவாரூர்ச்செம்பொனேதிருவாவடுதுறையுள்
அறவனேயெனையஞ்சலென்றருளாயாரெனக்குறவமரர்களேறே. (87)

### சுந்தர. திருவிடைமருதூர் பண் - தக்கேசி

கொடுக்ககிற்றிலேனொண்பொருடன்னைக்குற்றஞ்செற்ற
மிலைமுதலாக, விடுக்ககிற்றிலேன்வேட்கையுஞ்சினமும்வேண்
டிலைம்புலனென்வசமல்ல, நடுக்கமுற்றதோர்மூப்புவந்தெய்தந
மன்றமர்நரகத்திடலஞ்சி, இடுக்கணுற்றனனுய்வகையருளாயி
டைமருதுறையெந்தைபிரானே (88)

ஷ்டி சுவாமிகள். திருமழபாடி பண் - நட்டராகம்

பொன்னார்மேனியனேபுலித்தோலையரைக்கசைத்து
மின்னார்செஞ்சடைமேன்மிளிர்கொன்றையணிந்தவனே
மன்னேமாமணியேமழபாடியுண்மாணிக்கமே
அன்னேயுன்னையல்லாலினியாரைநினைக்கேனே (89)

ஷ்டி சுவாமிகள். திருக்கடவூர்வீரட்டம் பண் - நட்டராகம்

மண்ணீர்தீவெளிகால்வருபூதங்களாகியமற்றும்
பெண்ணோடாணலியாய்ப்பிறவாவுருவானவனே
கண்ணாருண்மணியேகடவூர்தனுள்வீரட்டத்தெம்
அண்ணாவென்னமுதேயெனக்கார்துணைநீயலதே (90)

## திருவாசகம்

### திருச்சதகம்

விச்சதின்றியேவிளைவசெய்குவாய்
 விண்ணுமண்ணகமுழுதும்யாவையும்
வைச்சுவாங்குவாய்வஞ்சகப்பெரும்
 புலையனேனையுன்கோயில்வாயிலிற்
பிச்சனாக்கினாய்பெரியவன்பருக்
 குரியனாக்கினாய்தாம்வளர்த்ததோர்
நச்சுமாமரமாயினுங்கொலார்
 நானுமங்ஙனேயுடையநாதனே. (91)

### அடைக்கலப்பத்து

மாவடுவகிரன்னகண்ணிபங்காநின்மலரடிக்கே
கூவிடுவாய்கும்பிக்கேயிடுவாய்நின்குறிப்பறியேன்
பாவிடையாடுகுழல்போற்கரந்துபரந்ததுள்ளம்
ஆகெடுவேனுடையாயடியேனுன்னடைக்கலமே (92)

### குழைத்தபத்து

அன்றேயென்றன்னாவியுமுடலுமுடைமையெல்லாமுங்
குன்றேயனையாயென்னையாட்கொண்டபோதேகொண்டிலையோ
இன்றோரிடையூறெனக்குண்டோவெண்டோண்முக்கணெம்மானே
நன்றேசெய்வாய்பிழைசெய்வாய்நானோவிதற்குநாயகமே. (93)

## திருவிசைப்பா

மண்டதேயுண்டுமுடுத்ததேயுடுத்துமடுத்ததடுத்துரைத்ததே
யுரைத்துங். கண்டதேகண்டுங்கேட்டதேகேட்டுங்கழிந்தனகடவநாளெல்
லாம் வண்டுதாமரைமேலன்னம்வீற்றிருக்கும்விழாவறாவீதிவெண்காடா.
அண்டரேகாணவம்பலத்தாடுமையனேயுய்யுமாறருளே, (94)

## சேந்தனார் திருப்பல்லாண்டு

பாலுக்குப்பாலகன்வேண்டியழுதிடப்பாற்கடலீந்தபிரான்
மாலுக்குச்சக்கரமன்றருள்செய்தவன்மன்னியதில்லைதன்னுள்
ஆலிக்குமந்தணர்வாழ்கின்றசிற்றம்பலமேயிடமாகப்
பாலித்துநட்டம்பயிலவல்லானுக்கேபல்லாண்டுகூறுதுமே (95)

## பெரியபுராணம்

உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்
நிலவுலாவியநீர்மலிவேணியன்
அலகில்சோதியனம்பலத்தாடுவான்
மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம். (96)

மறவாமையானமைத்தமனக்கோயிலுள்ளிருத்தி
உறவாதிதனையுணருமொளிவிளக்குச்சுடரேற்றி
இறவாதவானந்தமெனுந்திருமஞ்சனமாட்டி
அறவாணர்க்கன்பென்னுமமுதமைத்தர்ச்சனைசெய்வார். (97)

இறவாதவின்பவன்புவேண்டிப்பின்வேண்டுகின்றார்
பிறவாமைவேண்டுமீண்டும்பிறப்புண்டேலுன்னையென்று
மறவாமைவேண்டுமின்னும்வேண்டுநான்மகிழ்ந்துபாடி
யறவாநீயாடும்போதுன்னடியின்கீழிருக்கவென்றார். (98)

## கோயிற்புராணம்

தற்பரமாய்ப்பரபதமாய்த்தாவிலனுபூதியதாய்
அற்புதமாயாரமுதாயானந்தநிலையவொளிப்
பொற்பினதாய்ப்பிரிவினதாய்ப்பொருளாகியருளாகுஞ்
சிற்பரமாம்பரமாந்திருச்சிற்றம்பலம்போற்றி (99)

திருக்கோவையார்

நேயத்தாய்நென்னலென் னைப்புணர்ந் துநெஞ்சந்நெகப்போய்
ஆயத்ததாயமிழ்தாயணங்காயரனம்பலம்போல
தேயத்ததாயென்றன் சிந்தையதாய்த்தெரியிற்பெரிது
மாயத்ததாகியிதோவந்துநின்றதென்மன்னுயிரே. (100)

ஓமம்

திருநா. திருக்கடம்பந்துறை திருக்குறுந்தொகை

பூமென்கோதையுமையொருபாகனை
யோமஞ்செய்துமுணர்மின்களுள்ளத்தாற்
காமற்காய்ந்தபிரான்கடம்பந்துறை
நாமமேத்தநந்தீவினைநாசமே. (101)

பெட்டகக் கோயிலில் எழுந்தருளப்பண்ண

ஷை சுவாமிகள் திருக்கச்சியேகம்பம் பண் - காந்தாரம்

கைப்போதுமலர்தூவிக்காதலித்துவானோர்கள்
முப்போதுமுடிசாய்த்துத்தொழநின்றமுதல்வனை
அப்போதுமலர்தூவியைம்புலனுமகத்தடக்கி
எப்போதுமினியானையென்மனத்தேவைத்தேனே (102)

திருஞான. திருமறைக்காடு பண் - இந்தளம்

சதுரம்மறைதான்றுதிசெய்துவணங்கும்
மதுரம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
இதுநன்கிறைவைத்தருள்செய்கவெனக்குன்
கதவந்திருக்காப்புக்கொள்ளுங்கருத்தாலே (103)

மேற்படி சுவாமிகள். திருக்குடவாயில் பண் - காந்தாரம்

அடியார்ந்தபைங்கழலுஞ்சிலம்புமார்ப்பவங்கையில்
செடியார்ந்தவெண்டலையொன்றேந்தியுலகம்பலிதேர்வீர்
குடியார்ந்தமாமறையோர்குலாவியேத்துங்குடவாயில்
படியார்ந்தகோயிலேகோயிலாகப்பயின்றீரே. (104)

## சண்டேசுர பூசை

மேற்படி சுவாமிகள் திருக்குறுக்கை திருநேரிசை

*தழைத்ததோராத்தியின்கீழ்த்தாபரமணலாற்கூப்பி*
*அழைத்தங்கேயாவின்பாலைக்கறந்துகொண்டாட்டக்கண்டு*
*பிழைத்ததன்றாதைதாளைப்பெருங்கொடுமழுவால்வீசக்*
*குழைத்ததோரமுதமீந்தார்குறுக்கைவீரட்டனாரே.* (105)

### வெண்பா

*நீலகண்டன்பங்கயத்தாளே சரணாயுள்ளிருத்தும்*
*பாலனேஞானப்பரஞ்சுடரே - ஆலமுண்டான்*
*வண்டாரணிபுயனேவள்ளலைப்பூசித்தபயன்*
*சண்டேசனேபணிந்தேன்நா* (106)

பின்பு பிராயச்சித்தம் அகோரமந்திரம் ஜபித்து
இயன்றமட்டும் தோத்திரம் பண்ணுக.

சிவபூசைத்திரட்டு முற்றும்

